மந்தப் பெற்றியாலே, யென்காதலுயிர்போக வெற்றுடம்
போவிருக்குமுட னிறப்பேனென்னாத், தன்காதற்றுணையி
ழந்தவன்றியிலென விருந்தழுதாடமியளானாள். (உ௬)

(ஷ வேறு.)

நன்னகருறக்கநீங்கி நடுக்கமுற்றழுங்கக்காழித்
தென்னகர்ஞானச்செல்வர் சிவனகர்தொறும்போய்ப்பாடி
யந்நகரடைந்தாரங்கோ ரணிமடத்திருந்தார்கேட்டீ
தென்னெனவாள்விட்டாய்ந்துகோயிலினிடைவந்தெய்தி()

கன்னிநீயாரையுற்ற தென்னெனக்கன்னிதாழ்ந்து
தன்னருமரபுமின்றூர் தம்மையுமருகற்கென்றே
யுன்னினர்மன்றல்பேசி யிறந்ததுமுயிரன்னானை
டிந்நெறியடைந்திங்குற்ற நிகழ்ச்சியுமெடுத்துச்சொன்னாள்.

தந்தையுந்தாயுமன்னோர் தமியளாயிரங்கும்பேதைப்
பைந்தொடியாவிகாப்பான் பாம்புகோட்பட்டான்மாடே
வந்தவனாகமெல்லா மருந்துருவாகும்வண்ணஞ்
சிந்தைசெய்தருட்கண்வைத்தார்குதித்ததுதீவாய்நஞ்சம். ()

எழுந்தனனுறங்கினான்போ லிறந்தவன்யாருங்கண்டு [த்
தொழுந்தகைஞானவேந்தைத் தொழுதனர்துதிசெய்தார்வ
தழுந்தினர்கன்னியன்னமனையவளின்பத்தீந்தேன் [ள்.
பொழிந்தொருபுறத்தேகஞ்சம் பூத்ததோர்கொம்பினின்றா

தலைவனையிறந்தபோதுந் தனியுயிர்பெற்றபோதுஞ்
சிலைநுதல்காதன்மாமன் செல்வியாயிருந்துந்தீண்டா
நிலைமையுமன்புங்கற்பி னீர்மையும்வியந்துநோக்கி
மலைமகண்ஞானமுண்டார் வணிகனைநோக்கிச்சொல்வார்()

வருதிநின்மரபுக்கெல்லா மணியனாயுன்றன்மாமன்
றருதிருவனையாளின்பஞ் சாருநாடுன்பம்வந்து
பெருகுநாளன்றியென்றுன் மெய்தொடப்பெறுவளீண்டே
திருமணமுடித்துக்கொண்டு போகெனச்செப்பலோடும். ()

செங்கணேறனையானையன் றிருமொழிதலைமேற்கொண்டு
பங்கயன்படைத்தசாதி நான்கையும்பாதுகாப்பீ

ரெங்குலவணிகரின்றிக் கரிசளுமின்றியீங்கே
மங்கலமுடிக்கும்வண்ணம் யாதெனவணங்கிச்சொன்னான்.

கன்னியையீன்றஞான்றே யுனக்கென்றுன்காதன்மாம
னுன்னியதுறவினுள்ளா ரறிவரோயுனக்கிதன்றி
வன்னியுங்கிணறுமிந்த விலிங்கமுங்கரிகண்மைந்தா
விங்கிலவதுவைசெய்தி யெம்முனாகடவாதென்றார். (௬௧)

மாசறுமனத்தான்காழி வள்ளலைப்பணிந்துநீரோ
தேசிகர்குரவர்நட்டோர் தெய்வமுங்கிளையுமென்னுப்
பேசியவாறேவேள்விப் பெற்றியானிறீஇத்தான்வேட்ட
பாசிழையோடுந்தாழ்ந்து விடைகொடுபரவிப்போனான். ()

ஏவல்செய்யாபத்தாரு மடியருமீண்டவீண்டிக்
காவல்செய்மதுரைமூதூர் குறுகித்தன்காதன்மாமன்
பூவையைமணந்தவண்ணங் கேட்டங்குப்புடைசூழ்சுற்றம்
யாவருமுவப்பவின்புற்றிருந்தனனிளங்கோமன்னன் (௬௬)

தன்பெருந்தனமுமாம னீட்டியதனமுமீட்டி
மன்பெருநிதிக்கோனென்ன வாணிகம்பெருக்கிநாய்க
னின்புறுகாதலார்க ளிருவருமீன்றகாத
னன்பொருண்மகிழ்ச்சிசெய்யநலம்பெறவாழுநாளில் (௬௪)

மூத்தவள்சிறுவர்சால மூர்க்கராயுள்ளாரேனை
மாத்தளிரியலினட்கோர் மைந்தனுண்டிவனுமன்ன
நீத்தொழினுகமன்ன சிறார்களுமல்லற்செல்வம்
பூத்தநீணியமத்தூடு போய்விளையாடல்செய்வார். (௬௫)

முந்தியமனுட்டிமைந்தர் முகிழ்முலையிளையபாவை
மைந்தனையொருநாட்சீறி யடித்தனர்வருந்தியீன்ற
சந்தணிமுலையாண்மாற்று டனையரைவைதாளீன்ற
பைந்தொடிதானுஞ்சீறி யிளையளைப்பழித்துவைவாள் (௬௬)

எந்தவூரெந்தச்சாதி யார்மகள்யாவர்காணச்
செந்தழல்சான்றுவெங்கோன் கடிமணஞ்செய்துவந்த
கொந்தவிழ்கோதைநீயென் கொழுனனுக்காசைப்பட்டு
வந்தவளானகாமக் கிழத்திக்கேன்வாயும்வீறும். (௬௭)

உரியவன்றீமுன்னாக வுன்னைவேட்டதற்குவேறு
கரியுளதாகிற்கூறிக் காட்டெனக்கழறலோடு
மெரிசுடவாடிச்சாய்ந்த விணர்மலர்க்கொம்பிற்சாம்பித்
தெரியிழைநாணஞ்சாய்ப்ப நின்றிது செப்புகின்றாள். (௩௮)

அரவின்வாய்ப்பட்டவைக லாருயிரளித்தஞானப்
புரவலரருளாலெங்கோன் புறம்பியநாதன்வன்னித்
தருவொடுகிணறுங்காணச் செய்தனன்சாறம்மூன்று
கரிகளுமுள்ளவென்றாள் கற்பினாலொப்பிலாதாள். (௩௯)

மாற்றவணகைத்துநன்று நன்றுநின்மன்றல்வேள்விக்
கேற்றனகரியேசொன்னா யிங்குமக்கரிகண்மூன்றுந்
தோற்றுமேலதுவுமெய்யே யென்றனடோகையோடும்
வேற்றுமையிலாதசாய லிளையவள்விழுமங்கூரா. (௪0)

வெவ்வுயிர்ப்பெறியவில்போய் மெல்விரனெரிக்குங்கை
யா, லவ்வயிறதுக்கும்வீழுங் கண்புனல்வெள்ளத்தாழுங்,
கொவ்வைவாய்துடிக்குநாணந் தலைக்கொளுங்கூசுமன்னே,
தெய்வமேயாவாவென்னு மென்செய்கேன் சிறியேனென்
னும். (௪௧)

தாதைதாயிறந்தவன்றே தமியளாயிங்குப்போந்த
பேதையேற்காருண்டைய பேதுறுமவணிகற்கன்று
மாதுலனாகிஞாதி வழக்கறுத்துரிமையீந்த
நாதனேயேதிலாள்வாய் நவையினிற்காத்தியென்னா. (௪௨)

அன்றிரவுண்டியின்றித் துயிலின்றியழுங்கிப்பின்னாட்
பொன்றிணிகமலவாவிப் புண்ணியப்புனறோய்ந்தண்ட
நின்றிழிவிமானக்கோயி னிரம்பியவழகர்முன்னாச்
சென்றிருதாளில்வீழ்ந்து தன்குறைசெப்பிவேண்டும் (௪௩)

அன்றெனைக்கணவன்வேட்ட விடத்தினிலதற்குச்சான்றாய்
நின்றபைந்தருவுநீயுங் கிணறுமங்கிலையேயிங்கு
மின்றுவந்தேதிலாள்வாய் நகைதுடைத்தெனைக்காவாயேற்
பொன்றுவலென்றாள்கற்பின் புகழினைநிறுத்தவந்தாள். ()

அல்லலுற்றழுங்கிநின்றாள் பரிவுகண்டந்தண்கூட
லெல்லையில்கருணைமூர்த்தி யருளினாலெவருங்காணத்

தொல்லையின்படியேயன்னாள் சொல்லியகரிகண்மூன்று
மொல்லைவந்திறுத்தகோயி லுத்தரகுணபாலெல்லை. (௪௫)

அன்னபோதிளையான்மூத்தாட் கொண்டுபோயாலவாயெம்
முன்னவன்றிருமுன்றாழ்ந்து காட்டுவாண்முகிறேய்சென்னி
வன்னியீதிலிங்கமீது கிணறிதென்மன்றற்சான்றாத்
துன்னியவென்றாள்கண்டாண் முடித்தலைதூக்கிநின்றாள் ()

அவ்விடைத்தருவுநீறு மன்றுபோலின்றுசான்றா
யிவ்விடைப்பட்டவென்ன வதிசயமெவர்க்குந்தேறாத்
தெய்வமுமெளிவந்தங்கைக் கனியினித்திருவினன்னாள்
கைவசப்பட்டதென்றாற் கற்பினுக்கரிதேதம்ம. (௪௭)

மங்கைதன்கற்புமீச னிடத்தவள்வைத்தவன்பு
மங்கணனவட்குச்செய்த வருளையும்வியந்துநோக்கி
மங்கலநகராரொல்லா மகிழ்ச்சியுளாழ்ந்தார்முல்லைத் (ள்.
தொங்கலான்முதுமணாட்டி யொருத்தியுந்துன்பத்தாழ்ந்தா

மேதகுவணிகர்மூத்தவினைக்கொடியாளைப்பொல்லாப்
பாதகியிவளாமென்று பழித்தனர்படிறுபேசிக்
கோதறுகுணத்தினாளைக் குடிப்பழுதுரைத்தாய்நீயென்
காதலியாகாயென்று கணவனுந்தள்ளிவிட்டான். (௪௯)

அந்நிலையிளையாள்கேள்வ னடியில்வீழ்ந்திரப்பாளைய
மென்னை கூறற்றைநுயின்று நிறுத்தினளிவண்மாற்றாளன் ;
றன்னையிலாதேற்கன்னை யாயினளிவளும்யானு (ர்.
மின்னுமிருடல்போல்வாழ்வேமெனத்தழீஇத்தம்மினட்டா

உடம்பினுவிரண்டேயன்றி யுயிர்பொருளிரண்டற்றுள்ள
மடம்படுமழுக்காறற்று மைந்தருமனையராக
விடம்படுமைவாய்நாகம் விழுங்கிளையொத்துத்தம்மி
லிடம்படுமன்புற்றின்புற் றிருவருமிருந்தார்மன்னோ. (௫௧)

அருந்ததியனையாள்கேள்வற் காயுளுமானுச்செல்வப்
பெருந்தனநிறையுஞ்சீரு மொழுக்கமும்பீடும்பேறு
தருந்தவநெறியுங்குன்றாத் தருமமும்புகழும்பல்க
விருந்தனள்கமலச்செல்வி யென்னவீற்றிருந்துமன்னோ. ()

பொன்னவிர்கமலம்பூத்த பொய்கைசூழாலவாயெம்
முன்னவன்விளையாட்டெல்லை கண்டியார்மொழியவல்லா
ரின்னமுமளவின்றென்ப வெங்குருநாதசாமி (ம்ம.
சொன்னவாறுங்கட்கெண்ணெண் காதையுஞ்சொன்னேன

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

என்றுதென்மலேமே லிருந்தமாதவத்தோ னின்னருட்குருபரன்றனையு, மன்றவன்றிருவாய் மலர்ந்தவாசகமு மருளினிந்தொழுகவுள்ளடக்கித், தென்றமிழால வாய்த்தனிப்பதியைச் சென்னிமேற்பன்னிரண்டும்ப, ரொன்றவைத்திமையா வங்கயற்கண்ணி யுடனுறையொருவனை நினைந்தான்.

பரவசமடைந்து வழிகவர்ந்துண்ணும் பழிப்புலவேட்போயொளிப்ப, விருள்வெளிகடந்து திருவருள்வழிச்சென்றெண்ணிலாச் சராசரமனைத்தும், புரைவறநிறைந்து காட்சிகண்காண்பான் புதைபடத்தனித்தபூரணமா, புரைப்புணர்விறந்த வுண்மையானந்தவுணர்வினையுணர்வற வுணர்ந்தான்.

வன்னியுங்கிணறு மிலிங்கமுமழைத்தபடலம்

முற்றுப்பெற்றது

ஆ படலம் - எக - இ, திருவிருத்தம், ௩௩௪0.



அறுபத்தைந்தாவது.

## அருச்சனைப்படலம்

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

கன்னிதன்வதுவைக்கரிகளாயிலிங்கக் கடவுளுங்கவைக்கருங்கோட்டு, வன்னியும்படுநீர்க் கூவலும்வந்த வழியிதுமதுரைநாயகனைச், சென்னியில்வைத்த முனிவனைப்பூசை செய்துமாதவரொருங் கெய்திப், பன்னிறமலர்தூஉ யாலவாயானைப் பரவியபரிசதுபகர்வாம்.()

போதவானந்தத் தனிக்கடல்பருகும் புயல்புரைமுனிவனை வசிட்டமாதவனுதிமுனிவருமுலோபா முத்திரைதன்னொடும்வரித்துப் போதொடுசாந்தமான்மதந்தீபம் புகைமுதற்கருவிகைக்கொண்டு மேதகுசிறப்பாலருச்சனைசெய்து பின்னுமோர்வினவுரைசெய்வார்,()



(௬௫ வது) அருச்சனை திருவிளையாடல்.

(கொச்சகக்கலிப்பா.)

கோட்டஞ்சிலைகுனித்த கூடற்பிரானுடல்
கேட்டஞ்செவிபடைத்த பேறடைந்தேங்கேட்டபடி
நாட்டங்களிப்ப நறுமலர்தூஉய்க்கண்டிறைஞ்ச
வேட்டங்கள்யாங்களென வோதினார்மெய்த்தவரே. (௩)

என்றவறவோ ரெதிரோமுகமலர்ந்து
குன்றமடக்குங் குறுமுனிவன்கூறுவா
னன்றுமுனிகா ளிதனை நானுள்ளத்தெண்ணியாங்
கொன்றமொழிந்தீரொன்றுன் பின்னும்வியந்தோதுவான். (௪)

பண்ணான்மறைமுடியுந் தேருப்பரசிவனை
யெண்ணாலளவிறந்த வெக்கலையாற்கண்டுமுளக்
கண்ணாலறியாதார் வீட்டின்பங்காண்பரோ
மண்ணாதியாறாறு நீத்ததனிமாதவரே. (௫)

அஞ்செவியி லூறுபடக் கேட்டபடியாலவாய்ப்
பஞ்சமுகச்சோதிப் பரனைப்போயர்ச்சித்து
நெஞ்சநெகக்கண்டு நினையாவழிநினைந்து
வஞ்சவினைவேர்களைவான் வம்மின்களென்றானே. (௬)

மங்கலவோரை வருதினத்தில்வானிழிந்த
கங்கைபடிந்துலக நாயகனைக்கைதொழுது
புங்கவர்முன்சங்கற்பஞ் செய்தனுச்சைபூண்டொழுகி
யங்கவர்வாயாசி மொழிகேட்டகமகிழ்ந்தே. (௭)

ஐம்புலனுங்கூட்டற் பெருமானடியொதுக்கி
நம்பனுருவைந்தெழுத்து நாவாடக்கைகூப்பித்
தம்புனிதசைவ தவத்தெய்வத்தேர்மேல்கொண்
[illegible] லுற்றார்கணற்றவரே. (௮)

செய்யசடையர் திருநீறுசண்ணித்த
மெய்யர்தவநோற்றிளைத்த மேனியினருட்புறம்புந்
துய்யரணிக்கண்டிகையர் தோலுமருங்குடைய
ணையர்தவத்துக் கணிகலம்போற்போதுவார். (௯)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

புண்ணியந்தழைக்குந்தெய்வத் தலங்களும்புலன்கள்வென்றோர்
நண்ணியவனமுந்தீர்த்த நதிகளுந்தவத்தோர்நோற்கும்
வண்ணமுநோக்கிநோக்கி மலயமாமுனிவன்காட்டக்
கண்ணிணைகளிப்பநோக்கிக் கைதொழுதிறைஞ்சிச்செல்வார். (௧0)

சீறுகோளிலங்கைவேந்தைச் செகுத்திடவிராமன்பூசித்
தாறணிவிருபக்கண்ண னருள்பெறுதலமீதும்ப

ரோறிவீழ்ந்திறந்தோர்முன்ன மெண்ணியதெண்ணியாங்கே
மாறியபிறப்பினல்கு மலையிதுகாண்மின்காண்மின். (கக)

சுரபிநீள்செவியிலிங்கச் சுடருருவாயினன்ற
விரவினிற்றிருத்தேர்மன்ற னடக்குமூரிவ்வூர்மேலை
யுரவுநீர்க்களத்தேண்மாதத் துயர்ந்தகார்த்திகையிற்றேரூர்ந்
தரவுநீர்ச்சடையான்வேள்வி நடக்குமூரவ்வூர்காண்மின். (கஉ)

விற்பயிறடக்கைவேடன் மென்றவூன்பாகம்பார்த்தோன்
பொற்புறுகிரியீதண்டம் புழைபடவிடத்தாணீட்டி
யற்புதன்காளிதோற்க வாடியதிதுமாநீழற்
கற்புடையொருத்திநோற்கும் பிலமிதுகாண்மின்காண்மின். (கங)

திருமறுமார்பன்காவற் செயல்பெறவரனைப்பூசித்
திருகரமுகிழ்த்துநேர்நின் றேத்திடமிதுவாமோத்தி
னுவரம்பகன்றமுக்க ணுத்தமன்சந்தைகூட்டி
யருமறையறவோர்க்கோது வித்திடமதனைக்காண்மின். (கச)

அடிமுடிவிலங்கும்புள்ளு மளந்திடாதண்டங்கீண்டு
நெடுகியநெருப்புநின்ற நிலையிதுமுள்வாய்ச்சங்க
வடிவெடுத்திருவர்நோற்கு மலையிதுபலவேறாழி
யிடையுறமுன்னும்பின்னு மிருக்குமிக்குன்றைக்காண்மின் (கரு)

அவுணரிற்கள்வனை வந்தகற்காய்ந்துமூன்று
புவனமுங்கவலைதீர்த்த புண்ணியன்புரமீதாகுந்
தவலரும்புரங்கண்மூன்றுந் தழனுதற்றிருக்கண்சாத்திப்
பவமறுமூவரன்பிற் பட்டவன்பதியைக்காண்மின். (கசு)

சத்தியஞானானந்தத் தத்துவமசைவற்றுடு
நித்தியபரமானந்த நிறையருண்மன்றமீது
முத்தியங்குதித்தோரெய்தும் பதியதமுதனானன்கும்
பத்தியிற்பூசித்தேத்தும் பதியிதுவாகும்பார்மின் (கஎ)

பிரமன்மான்முதலாந்தேவர் பிரளயத்திறவாவண்ணம்
பரமனார்தோணியேற்றும் பன்னிருநாமம்பெற்ற
புரமிதுசட்டாயுசம்பா திகள்பெரும்பூசைசெய்ய
வரமளித்திருணோய்தீர்க்கு மருந்துறைபதியீதாகும். (கஅ)

மதிநுதலிமயச்செல்வி மஞ்ஞையாய்வழிபட்டேத்து
மிதுதுலாப்பொன்னித்தான மெம்மனோர்மூன்றுகோடி
மதிபெறுமுனிவர்வீந்த வழிபடுமூதூரீதிப்
பதியறக்கடவுள்பூசை பண்ணியதானங்காண்மின். (கக)

கோடுநான்குடையவேழந் தாருகன்குறைத்தகோட்டைப்
பாடறநோற்றுப்பெற்ற பதியிதுமாலைசாத்துந்

தாடகைமானங்காப்பான் றாழ்ந்துபூங்கச்சிட்டீர்க்கும்
நீடுறுகலையனன்பி னிமிர்ந்தவெம்பிரானூரீதால். (௨௦)

கரிமுகத்தவுணற்காய்ந்து கரிமுகத்தண்ணல்பூசை
புரிசிவநகரமீது தாருகற்பொருதுசெவ்வே
ளரனையர்ச்சித்ததார்க்கீழ் மணற்குறியான்பாலாட்டிப்
பரன்முடிமாலைசூடுஞ் சேய்வளம்பதியீதாகும். (௨௧)

கறுவிவீழ்காலன்மார்பிற் சேவடிக்கமலஞ்சாத்திச்
சிறுவனுக்காயுளீந்த சேவகப்பெருமான்மேய
வறைபுனற்பழனமூதூ ரதுவிதுவானைதந்த
குறையுடற்போர்வைபோர்த்தகொற்றவன்கோயில்காண்மின். (௨௨)

பங்கயக்கடவுளீந்த பரிசிலம்வாங்கிக்கொண்ட
வங்கணனிடமீதாட லனங்கனையமுதுசெய்த
செங்கணனிருக்கையீது மேழகச்சென்னிதன்னை
மங்கலமாமற்கீந்த மருகனிருக்கைகாண்மின். (௨௩)

திண்டிறலவுணன்றன்னைப் பெருவிரற்றீட்டுநேமி
யுண்டிடவிருந்தாக்கொண்டோ னுறையதாமொருத்திமன்றல்
கண்டிடுகரியாய்க்கூவல் கண்ணுதலிலிங்கம்வன்னி
யெண்டிசையறியக்காட்ட நின்றிடமிதனைக்காண்மின். (௨௪)

சாமகண்டத்தன்றன்னைத் தானருச்சித்ததென்னர்
கோமகன்பிரமசாயை குறைத்ததிப்பதியாங்கங்கை
மாமகந்தோறும்வந்து வந்துதற்படிந்தோர்விட்டுப்
போமகம்போகமூழ்கும் புனிதநீர்ப்பதியைக்காண்மின். (௨௫)

குருமொழிதந்தைக்கீந்தெங் குருவுறைமலையீதெங்கோன்
கருமுகில்வண்ணத்தண்ணல் கண்ணிடந்தடியிற்சாத்தப்
பெ[illegible]ீந்த புரமிதுநந்தியெந்தை
திருவுருவடையநோற்ற தலமிதுதெரிந்துகாண்மின். (௨௬)

முடங்குகாற்சிலந்தியானை மலைமகண்முளரிநாட்டத்
தடங்கடல்வண்ணனேற்ற தவநகரிதுமுச்சென்னி
மடங்கலேறனையானும வரையிதுகுடைந்தோர்பாவ
மடங்கலும்பருகும்பொன்னி யாறிதுகாண்மின்காண்மின். (௨௭)

இந்திவெண்முத்தார மேனக்கிடந்திலங்குஞ்சென்னி
மன்னவனுடைதென்ப தமிழறிவையைப்பேரியா
றந்நதிதுறக்கமண்மேல் வழுக்கிவீழ்ந்தாங்குத்தேற்றித்
தென்னவனுடுசெய்த்தாத் தெரிவதேகாண்மினென்றான். (௨௮)

பொங்கர்மென்புதல்களென்னப் பொருந்திசிறுகாலென்னக்
கொங்கலர்தடஞ்சிற்றூறற் குழியெனப்பழனஞ்சில்லி

தங்குமென்பாத்தியென்னத் தாழைதாழ்சிறுபுல்லென்னப்
பைங்குலைக்கதலிமஞ்சட் பாத்திபோற்சூழ்ந்தறக்கண்டார். (உகூ)

பின்னிறமாடமாலை யுபரிகைப்பந்திசெய்குன்
றன்னம்வெண்குருகுசெம்போத் தழகுபைங்கிள்ளைமஞ்ஞை
யின்னபுள்வேறுவேறு யொழுங்குபட்டிருப்பதொப்ப
மின்னுபூங்கொடியப்புட்கள் சிறகெனவிரிப்பக்கண்டார். (௩0)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

கண்டுநாட்டுநகர்வளங்க ணடந்துநடந்துகண்கள்விருந்
துண்டுமீளவுகல்விசும்பா ரொழுகிவலமாவருமுனிவர்
விண்டுழாவுங்கொடுங்குன்றுந் தளிப்புத்தூரும்விரிபொழில்வாய்
வண்டுபாடன்மயிலாடல் பயிலாடானைவளநகரும். (௩க)

சாதவேதம்பரவுபுன வாயினகருந்தவசித்த
ரிரதவாதஞ்செய்துசிவ னுருவங்கண்டவெழினகரும்
வரதனுகியரனுறையுங் கானப்பேருமலைமகளை
விரதயோகநெறிநின்று மணந்தார்சுழியல்வியனகரும். (௩உ)

மறவாளிலங்கையிறைமகனை வதைத்தபழியாள்மருண்டரியன்
றறவாணேமியளித்தவனை யர்ச்சித்தகன்றவணிநகரு
நிறவாண்முத்தும்வயியே நிரையும்பொன்னும்விளைபொருளைத்
துறைவாய்ப்பிறவாக்கடவுள்வேய் வயிற்றிற்பிறந்ததொன்னகரும். ()

துளபக்குன்றைக்கொன்றைமுடிக் குன்றமாக்குந்தொன்னகரு
மளகைப்பொறித்தகொடியிளையோன் மானேர்நோக்கினுமைமகள்
புளகக்குன்றைமணந்துமுத லிருந்தபொருப்பும்போர்விசயன்
வளைவிற்றுக்கவடுக்கிடந்த முடியோன்மேயவளநகரும். (௩ச)

கொண்டல்படியுந்திருவாப்ப னூருந்தொழுதுஞாயிறுநாகலை
வண்டுபடியுங்கமலமுக வையைப்பிராட்டியெதிர்வணங்கிக்
கண்டுபணிந்துதிசையெட்டும் விழுங்கியண்டங்கடந்துலக
முண்டநெடியோனெனவுயர்கோபுரமுன்னிறைஞ்சியுள்புகுதா (௩௫)

மறுதோரும்பணிந்தெழுந்து வளைந்துவளைந்துபொற்கோயில்
குறுகிவிதியாற்பொற்கமலங் குடைந்துசெய்யுங்குறைநிறுவி
யுறுதிபெறவைந்தெழுத்தெண்ணி யூற்றுமதத்துநாற்றடந்தோட்
சிறுகுகண்ணைவங்கரத்துச் சித்தியானையடிவணங்கா. (௩௬)

மும்மையுலகுநான்மறையு முறையாலீன்றவங்கயற்க
ணம்மையடிகீண்முடியுறத்தாழ்ந் தன்புகொடுத்தின்னருள்வாங்கி
வெம்மையொளிகான்மணிக்கனக விமானத்தமர்ந்ததனிச்சுடரின்
செம்மையடித்தாமரைவேணிச் சிரமேன்மலரப்பணிந்தேத்தா. (௩௭)

(௸ ஆசிரியவிருத்தம்.)

அன்றிருபோதுமுண்டி துறந்திராவறுக்குந்திவா
ளொன்றெழுமுன்னீராடி நியதிகளியற்றியைந்தும்
வென்றுளத்தன்புபாய விளைமுழுமுதலைப்பார்மேன்
மின்றிரண்டென்னநின்ற விமானமீதிருப்பக்கண்டார். (௫௮)

வாசமஞ்சனந்தேன்கன்னற் பைங்கனிமறுவிலானைந்
தாசறுமமுதமைந்து தென்மலையாரம்வாசம்
வீசுதண்பனிநீர்வெள்ள மான்மதம்விரைமென்போது
தூசணிமணிப்பூணல்ல சுவையமுதின்னதாங்கா. (௫௯)

சதவுருத்திரத்தாலாட்டி மட்டித்துச்சாத்திப்பூட்டிப்
பதமுறமனுவாலட்ட பாலமுதருத்திப்பஞ்ச
விதமுறுவாசம்பாகு வெள்ளிலையளித்துப்போக
முதவுறுதூபதீபா திகள்பலவுவப்பநல்கா. (௬௰)

ஐம்முகச்சைவச்செந்தீ யகத்தினுந்துடைவையார
றெய்ம்முகந்தருத்திப்பூசை நிரம்பினால்வேதஞ்சொன்ன
மெய்ம்மனுநூற்றுப்பத்தான் மூவிலைவில்லநீலங்
கைம்மலரேந்திச்சாத்திக் கடவுளையுவப்பச்செய்து. (௬௧)

வாசமஞ்சனநீரோடு மந்திரமலர்க்கைக்கொண்டு
பூசையின்பயனைமுக்கட் புண்ணியன்கையினல்கி
நேசநெஞ்சுருகக்கண்க ணிறையநீரூறிச்சோர
வீசனையிறைஞ்சியாரு மஞ்சலித்தேத்தல்செய்வார். (௬௨)

(எண்சீரடியாசிரியவிருத்தம்.)

பழியொடுபாசமாறு கெடவாசவன்செய்பணி கொண்டவண்ட சரணம், வழிபடுதொண்டர்கொண்ட நிலைகண்டுவெள்ளி மணிமன்றுளாடி சரணஞ், செழியன்விளிந்திடாத படிமாறியாட றெளிவித்த சோ[illegible]டல்கூவிமாமி யுடன்மாமனூட விசைவித்தவாதி சரணம். (௬௩)

வெங்கரியாவிசோர நரசிங்கவாளி விடுவேடரேறு சரணம்
புங்கவர்தேறவாதி மறையுட்கிடந்த பொருளோதுபோத சரணம்
வங்கமதேறிவேலை மகரம்பிடித்து வலையாண்மணாள சரணம்
கங்கணநாகம்வீசி நகரெல்லைகண்ட கறைகொண்டகண்ட சரணம்.

மைந்தனிலாழிமேரு மகவானகத்தை மடிவித்தநித்த சரணஞ்
சுந்தரசாமவாளி பணிகொண்டுகிள்ளி தொகைவென்றவீர சரணம்
வெந்திறன்மாறன்முன்க லுருவானைகன்னன் மிசைவித்தசித்த சரண
முந்தியகல்லின்மாதர் பெறவட்டசித்தி முயல்வித்தயோகி சரணம்.

திருமணிமைந்தன்மைந்தன் முடிசூடவிற்ற திருமல்குசெல்வ சரண
மருமகனென்றுமாம னுருவாய்வழக்கு வலிபேசுமைந்த சரணங்

குருமொழிதந்துநாளா குருவிக்குவீடு குடிதந்தவெந்தை சரணம்
வருபழியஞ்சிவேட மகனுக்கிரங்கு மதுராபுரேச சரணம். (சகூ)

விருத்தகுமாரபாலவருண்மேனிகொண்டுவிளையாடுமெண்ணல்சரணங்
குருத்திலையைநச்சுபாவி யுயிருண்டுசோரி குடைவாளைவேல சரணங்
கருத்திசைபாணனுனி னிசைபாடிமாறு களைவேதகீத சரண
நரித்திரண்மாவைமீள நகரங்கலங்க நரிசெய்தநம்ப சரணம். (சஎ)

மூற்பகலாறிரண்டு சிறுபன்றியுண்ண முலைதந்தவண்ண சரணம்
பொற்புறுமாயவாவை யடலேறுகொண்டு பொருதட்டசிட்ட சரண
பற்பலஞாலமெங்கு மடையப்பிரம்பு படுமட்டமூர்த்தி சரணங் [ம்
கற்பினொருத்திமன்ற லறிவிக்கமூன்று கரிதந்தவள்ளல்சரணம் (சஅ)

அளவைகளாலும்வேத முதனூல்களாலு மயன்மாயனாலு மளவாக், களவையுனக்குநாம குணசின்னசாதி கதிசெய்தியில்லையவையு, முளவெனயாமறிந்து துதிசெய்யவேகொ லுலகஞ்செயன்பினெளிதாய், விளையருண்மேனிகொண்டிவ் வறுபத்துநாலு விளையாடல் செய்த படியே. (சகூ)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

எனத்துதித்தவசிட்டாதி யிருடிகளைக்குறுமுனியை யெறிதெளிப [ச்
வனத்துறையுஞ்சிவபெருமானிலிங்கத்தின்மூர்த்தியாய்வந்துநோக்கி
சினத்தினைவென்றகந்தெளிந்தீர் நீர்செய்தபூசைதுதி தெய்வத்தான
மனைத்தினுக்குமனைத்துயிர்க்குநிறைந்துநமக்கானந்தமாயிற்றென்று (ரு௦)

சிறந்தவருள்சுரந்துகுறு முனியைவருகென்றுகரஞ் சிரமேல்வைத்துப், புறந்தடவியெமையொப்பாய் நீயேநின்கற்புடைய பொலங்கொம்பன்னு, ளறந்தழையுமுமையொப்பா ளாதலினாலுமையொப் பாரகிலத்தியாரோ, நிறைந்ததவம்புரிந்தோனுந் தவத்துறுதிபெற்றோனு நீயேயன்றோ. (ருக)

ஊனக்கரியவரமினியாந்தருவதெவனுனக்கரிதாவொன்றுங்காணு, மெனக்கருணைசெய்திலிங்கத் திடையிச்சைவழி ஏரியச்சென்றிருந்தானுகத், தனக்கரியவரநல்குஞ் சிவலிங்கந்தன்பெயராற் றாபித்தான்றன், னினக்கருணைவசிட்டாதி முனிவர்களுந்தம்பெயரா லிலிங்கங்கண்டார். (ரு௨)

ஏத்தியருச்சனைசெய்துநினைவிலரிதாயன்பிலெளியவட்ட, மூர்த்தியையங்கயற்கண்ணியன்பனைமுப்போதும்போய் முடிதாழ்ந்தின்பம், பூத்தமனத்தினராகிக் கருவித்தேன்பொதிந்தசிறுபுட்போலந்த, மாத்தலனில்வசிட்டாதி முனிவர்தபோவனஞ்செய்து வதிந்தார்மன்னோ.

அருச்சனைப்படலம் - முற்றுப்பெற்றது.

ஆ படலம் - எ௨ - இ, திருவிருத்தம், ஙஙசுங.

திருச்சிற்றம்பலம்.

# திருவிளையாடற்புராணம்

# திரிசொற்பொருள் விளக்கம்.

## பாயிரம்.

௪. கவுணியர் - திருஞானசம்பந்தர்.—௫. ஆணை - ஏவல்.—எ பூவிஞயகன் - பிரமன்.—காவிஞயகன் - இந்திரன்.—௧௦. விடை - ரிஷபக்கொடி.—கயல் - மீனக்கொடி.—வழுதி-பாண்டியன்.—௧௧. செழியன் - பாண்டியன்.—௧௨. புழுக்கம் - வருத்தம்.—௧௪. பசு போதம் - சிவபோதம்.—௧௫. பொருப்பு - கிரவுஞ்சமலை.—௧எ. வேத்திரம் - பிரம்பு.—௧அ. மீனக்கொடியன் - மன்மதன், பாண்டியன்.—பிடியனநடையாள்-இரதிதேவி, மங்கையர்க்கரசியார்.— ௨௦. புலவி - ஊடல்.—கழுது - பேய்.—பானுள் - பாதிராத்திரி.—௨௩. ஈசசங்கிதை-சங்கரசங்கிதை.—௨௯. கழகமாந்தர்-சங்கப்புலவர்.—௨எ. உளன் - யாகபலி.—௩௦. அறுகாற்பீடம் - அற்றகாலினதாகிய சேஷசயனம்.—அறுகாற்பீடு - அறுகினுற்பெருமை.

## நாட்டுப்படலம்.

௩. தடித்தல் - மின்னல்.—வாள் - கடகம், ஒளி.—அம்பு- நீர், சரம்.—கொண்மூ-மேகம்.—௫. தென்மலை- பொதியமலை.—அ. செவி-காது, (செவ்வி) அழகு.—௯. கூந்தல்- கூந்தற்பனை.—௧௦. பொருநை - தாமிரபருணி.—௧௧. ஆனைந்து - பஞ்சகவியம்.—௧௨. பொன் - பொற்பொடி, பொன்னிறமாகியதேமல்.—அன்னம் - அன்னப்பட்சி, சாதம்.—கை-கனை, கரம்.—சங்கம்-சங்கு, வளை.—காஞ்சி-காஞ்சிவிருட்சம், மேகலை.—வரம்பு- கரை, கற்புநிலை.—பரம்பரன்-பிக்ஷாடனர்.—௧௩. குழை - குண்டலம், தளிர்.—செவிலி - வளர்த்ததாய்.—௧௯. அலமுகவிரும்பு - கலப்பைக்கார்.—௨௪. கரு-(நெற்) கதிர்.—௨அ. காணித்தெய்வம் - கிராமதேவதை.—௨௯. இறுங்கு - சோளம்.—தோரை-மலைநெல்.—யானைபழுக்குலை - யானைக்கொம்பு வாழையின்பழுத்தகுலை.—௩௦. திறவினை - பூர்வவினை.—௩௨. புழுக்கல் - பருப்பு.—௩௫ கதி-மிளகு.—ஆயம்-மகளிர்கூட்டம்.—௩௯. சேவகம் - யானைதுயிலிடம்.—௪௧. அலர்தூற்றல் - பலரறியப்பழித்தல், பழம்பூவைச்சொரிதல்.—௪௯. முத்தீ - ஆகவனீயம், தக்ஷிணாக்கினி, காருபத்தியம்.—௪எ. ஐவனம்-மலைநெல்.

## நகரப்படலம்.

உ. சுழியல் - திருச்சுழியல், நீர்ச்சுழி.—குற்றாலம் - திருக்குற்றாலம், குறுமையாகியவாவிலே.—ஏடகம் - திருவேடகம், தாமரைப்பூவினிதழ்.—பூவணம்-திருப்பூவணம், பூவினிறம்.—வேய்வனம் - (வேய்-நெல், மூங்கில்) திருநெல்வேலி, மூங்கில்வனம்.—௩எ. அரமியம் - நிலாமுற்றம், உப்பரிகையின்மேலுலாவும்வெளி —பயோதரம் - மேகம், ஸ்தனம்.—கொடி - துவசம், கொடிபோன்றமாது.—௩௯. வண்டு-வளையல், வண்டு.—அறனெறி-(அறல்) கருமணல்நிறம், (அறன்) தருமமார்க்கம்.—நெய்-புழுகு.—௪௪. புண்ணியம்-விபூதி.—௫௧. பூவை - நாகணவாய்ப்பக்ஷி.—௫௪. மறுகு - வீதி.—௬0. திணையளிப்பன - முத்து, பவளம், உப்பு, முதலியன.—கரையளிப்பன-நெல், பயறு, வாழை, முதலியன.—தரையளிப்பன- தேன், அரக்கு. நாவி, முதலியன.—வரையளிப்பன-மிளகு, குங்குமம், ஏலம், முதலியன.—௬௨. பீடிகை - கடைவீதி.—௬எ. தொன்மரம்-ஆலமரம்.—மாயகாரியவொலி- அகரமுதலியவெழுத்துக்கள்.—வான்முதற்கருவி - ஆகாயமுதலியபூதங்கள்.—௬அ. ஏழுலோகம்-பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், வெண்கலம், தரா.—எ௨. கார்முகம்-வில்.—உடம்பிடி - வேல்.—நாஞ்சில் - கலப்பை.—நாந்தகம்-வாள்.—இகல்விந்தை - ஜெயலக்ஷ்மி.—எ௫, தமக்கு - தம்முயிரிடத்து.—அக. ஆர் - சோழனுக்குரியஆத்திமாலை.—போந்து - சேரனுக்குரியபனம்பூமாலை.—அ௩. முஞ்சி- ஓர்விதநாணற்புல்.—கிடை-பள்ளிக்கூடம்.—௯0. போதகக்காட்சியர் - ஆசிரியர்.—க0௪. பாணி-இசைப்பாட்டு.

## திருக்கைலாயப்புகழ்ச்சி.

க. முதுவானவர் - திருமால், பிரமன்.—௪. அகம் - இடம், உள்ளம்.—கண் - இடம், நேத்திரம்.—சாரூபம் - பரமசிவனைப்போல் சடை முடி காளகண்ட திரிநேத்திர மான் மழு சதுர்ப்புஜமுதலிய சிவரூபம்பெறுதல்.—எ. யானைபூசித்தது - திருவானைக்கா.—புலிபூசித்தது -பெரும்பற்றப்புலியூராகிய சிதம்பரம்.—சர்ப்பம்பூசித்தது-திருக்காளத்தி.

## புராணவரலாறு.

௧௬. வியாதன்மாணக்கன் - சூதமுனி.—௧௧ - காசியடிகள் - விசுவநாதர்.—முத்திமண்டபம்- காசித்தலத்துமண்டபம்.—உ0. தல

முதல்மூன்று - தலம், தீர்த்தம், மூர்த்தி.—வேல்நம்பி - சுப்பிரமணியர்.

## தீர்த்தவிசேடம்.

௨. முந்நீர்-ஊற்றுநீர், வேற்றுநீர், ஆற்றுநீர்.—௨௧. பவித்திரம் - பரிசுத்தம்.—௨௬. மதிகதிரோனிடத்தொரீங்குதினம் - அமாவாசைத்தினம்.—அராவிழுங்குதினம் - கிரகணதினம்.—௩0 தகர்-சித்திரை.—துலாம் - அப்பிசி.—சுறவு-தை.—அலவன் - ஆடி.

## மூர்த்திவிசேடம்.

௨. வாரணவாசி - காசி.—௬. சமஷ்டி -எசம்.—வியஷ்டி-வெவ்வேறு.—௧௭. புலரி - விடியற்காலம்.—கபிலை - பசு.—௨௪. ஐந்தமுதம் - பஞ்சாமிர்தம்.—௨௭. பளிதம் -கற்பூரம்.—முகவாசம்-"தக்கோலந் தீம்பூ தகைசாலிலவங்கங் கற்பூரஞ் சாதியோடைந்து."

## பதிகம்.

௨. புலிமுனி - வியாக்கிரபாதர்.—பணிமுனி - பதஞ்சலி.—௫. கட்டங்கம் - மாத்திரைக்கோல்.—௬. மாணவன்- (மாணவகன்) சீஷன்.—௮. சென்னி- சோழன்.—புகார்-காவிரிப்பூம்பட்டினம்.—௧௧. ஏனக்குருளை - பன்றிக்குட்டி.—கயவாய் - கருக்குருவி.—௧௨. செம்பியன் - சோழன்.

## ௧ - வது. இந்திரன்பழிதீர்த்தபடலம்.

௩. மூவகைமலர் - கோட்டுப்பூ, நீர்ப்பூ - நிலப்பூ.—௧௧. ஓதி- உட்பொருளுணர்தல்.—தலைகண்மூன்று - சோமபானஞ்செய்கிறமுகம், சுராபானஞ்செய்கிறமுகம்; அன்னபானஞ் செய்கிறமுகம்,—இவை முறையே காடை, ஊர்க்குருவி, சிச்சிலியாய்ப்பரந்தன.—௧௩. பூப்பு - மகளிர்சூதகம்.—பயின் - பிசின்.—௩௩. வீ-பக்ஷி.—ஐவர் - பஞ்சேந்திரியம்.—௩௬. ஆக்கம் - வாழ்த்துதல்.—௩௧. ஆக்கம்-வென்றி.—௪௨. குறையாமெய்யர் - மரிக்காதஉடம்பையுடையவர், அமரர்.—௫௬ கங்கம்-பருந்து.—௬௨. கெட்டேன்-அவலத்தால்வரும் இரக்கச்சொல்.—௬௩. மாதவரெழுவர் - அகத்தியன், ஆங்கிரசன், கௌதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிஷ்டன்.—௬௪. சர்ப்பவென்றல்-விரைந்துநடக்கஏவுதல்.—௬௬. இலஞ்சி - தடாகம்.—௭௫. இறும்பூது - அதிசயம்.—௭௬. திப்பியம்-திவ்வியம்.—௮௩. எட்டு திருவுருவம்-பஞ்சபூதம், சந்திரசூரியர், ஆத்

மா.—அ௪. தருவைந்து - சந்தானம், பாரிசாதம், கற்பகம், அரிசாத னம், மந்தாரம்.—திருப்பள்ளித்தாமம் - பத்திரபுஷ்பம்.—மந்தாகி னி, ஆகாசகங்கை.

## உ - வது. வெள்ளையானை சாபந்தீர்த்தபடலம்.

எ. கூம்பு - பாய்மரம்.—மீகான் - மாலுமி.—அ. கையுறை-கா ணிக்கை.—கரு. கோள் - வலிமை.—தானம் - யானைமதம்.—௩௪. ஈரேழரும்பதம்.—பதினுலிந்திரப்பட்டமாகிய ஒரு பிரமகற்பம்.

## ௩ - வது. திருநகரங்கண்டபடலம்.

உ. எழால், நரம்பினோசை.—௩. இளங்கோக்கள் - வணிக ர்.—சு. கரம் - கிரணம்.—க௩. கடம் - யானைமதம்.—க௪. சிவகு குறி - சிவலிங்கமூர்த்தம்.—கசு. நீபம் - கடம்பமரம்.—௩௫. சார் புநூல் - முதல்-வழி-சார்பு-என்னும் சிற்பநூல் மூன்றனுள் ஒன்று.— ௩அ. குளிகை - மண்டபம்.—௩௯. பீடிகை - கடைதெரு.—தெற் றி- சித்திரகூடம்.—பித்திகை-சுவர்.—கவலை - கவர்வழிசந்து.—சது க்கம்-நாற்றெருக்கூடுமிடம்.—௪0. சுவையாறு-கைப்பு, இனிப்பு, பு ளிப்பு, உவர்ப்பு, கார்ப்பு, துவர்ப்பு.—நால்வகையுண்டல்- உண்டல், தின்றல், நக்கல், பருகல்.—௪க. துடவை-தோட்டம். ௪௫. நாற்பெ ருங்குடி-பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்.—தாழ்ந்த நாற்பெரு ங்குடி- அனுலோமர், பிரதிலோமர், அந்தராளர், விராத்தியர்.—அனு லோமர் - உயர்குலஆணும் தாழ்ந்தகுலப்பெண்ணுங் கூடிப்பிறந்த வர்.—பிரதிலோமர்- உயர்குலப்பெண்ணும் தாழ்ந்தகுலஆணும் கூடி ப்பிறந்தவர்.—அந்தராளர்- அனுலோமஆணும் பிரதிலோமப்பெண்ணு ம் கூடிப்பிறந்தவர்.—விராத்தியர் - அனுலோமப்பெண்ணும் பிரதி லோமஆணுங் கூடிப்பிறந்தவர்.—புறக்குடிமூன்று - கோளகர் - கை மைபெற்றவர்.—குண்டகர் - வேற்றோர்க்குப் பெற்றவர்.—தாசிகர்- விரதிபெற்றவர்.—௪௬. மூன்றுறுப்பு - நித்தியம் - நைமித்தியம், காமியம்.

## ௪ - வது. தடாதகைப்பிராட்டியார் திருவவதாரப்படலம்.

அ. உதாத்தம் - பேரோசை.—அனுதாத்தம்-குறைந்தஓசை.— சொரிதம் - சமமானவோசை.—வாசவனிருக்கை - கீழ்த்திசை.— ௭0. ஐம்முகம் - ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தி

யோசாதம்.—கஉ. சைவமுதலாயின - சைவம், பாசுபதம், மகாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம், ஆக ஆறு.—கசு. சூழி- உச்சிக்கொண்டை.—உஉ. பராயாதி - பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, ஆகபஞ்சசத்திகள்.—உங. பரிவு - வருத்தம்.—உக. பண்டாரம் - பொக்கிஷம்.—யாப்பு- விலங்கு.—ஙஎ. பூதகங்கை-பரிசுத்தமானதீர்த்தம்.—ஒன்பதுதீர்த்தம் - கங்கை, யமுனை, சரஸ்வதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவிரி, துங்கபத்திரி, தாமிரபருணி.—சச. கன்னல் . நாழிகை.—சசு. அத்தாணி - சபாமண்டபம்.—சஎ. அனிந்திதை, கமலினி-கைலையில் பார்வதியார் தோழிகளிருவர்.—சஅ. செடி - பாவம்.—ருஉ. ஐந்துறுப்பு - பஞ்சாங்கம்.—ருச. உத்தேசம் - விவரிக்கும்பொருளைப் பெயர்மாத்திரங்கூறல்.—இலக்கணஅமைதி - அப்பொருளின் சிறப்புத்தன்மையைக்கூறல்.—சோதனை-அப்பொருளில் இலக்கணம்உண்டோ வில்லையோவென்று விசாரித்தல்.—அனுவாதித்தல் - எதிரிசொல்லியவற்றை மீட்டும் எடுத்துக்கூறல்.—நீதி-நியாயநூல்.—ருசு.நாவிருந்தமுதசெய்தல்-வாழ்ந்துக்கேட்டு மகிழ்தல்.—ருக. வேள்விஐந்து-பிரமயாகம். (வேதமோதுதல்).—தெய்வயாகம் (ஓமம்வளர்த்தல்).—பூதயாகம் (பலியீதல்).—பிதிர்யாகம் (தர்ப்பணமுடித்தல்).—மானுடயாகம் (இரப்போர்க்குணவுகொடுத்தல்).—சுரு. சுவாகதம்- கிள்ளை.—எரு. சுவல்-பிடரி.—மாடகம் - முறுக்காணி.—எஎ. வண்டல்-மகளிர்விளையாட்டு.

## ரு - வது. திருமணப்படலம்.

௪உ. கலி - பாபம்.—ந. தனி - துன்பம்.—வைப்பு - உலகம்.—௭. படகம்-தம்பட்டமென்னும்வாத்தியம்.—அ. தோல்-கேடயம்.—பிணாத்தெய்வம் - பெண்தெய்வம்.—கஉ. வென் - முதுகு.—கஅ. புலிக்கொடி - சோழன்கொடி - விற்கொடி - சேரன்கொடி.—பானல்-கருங்குவளை.—உக. திரு - செல்வப்பொருள்.—உங. அனிகம் - சேனை.—தும்பை - போர்புரிவோர்அணியுமாலை.—உஅ. வட்டித்தல்-சபதங்கூறல்.—ருஉ. மத்திகை - (குதிரைச்) சவுக்கு.—ருஅ. காசறை - மயிர்ச்சாந்து.—சுசு. பித்தி—(பித்திகை) சிறுசண்பகம்.—சுஎ மேகலை - ஓமதுண்டத்தின்வறுப்பு.—சீவற்சம் - குழந்தையையிடையில்வைத்திருக்கும் ஸ்திரீரூபம்.—சுவத்திகம் - ஒருமண்டபவடிவம்.—சுக. காவணம் - பந்தல்.—எ0. குறடு - மேடை. விடங்கம் -

கொடுங்கை.—க0எ. களாஞ்சி - படிக்கம்.—கஉச. அளி - கிருபை, வண்டு.—ஒழுக்கம்-ஆசாரம், ஒழுங்கு.—மன்மதபாணங்கள்- நீலப்பூ, முல்லைப்பூ, தாமரைப்பூ.—கஉரு. கண்-நீலப்பூ.—மூரல்-முல்லைப்பூ.—வதனம்-தாமரைப்பூ.—கருக. எல்மணி - சூரியன்.—கசுஉ. மந்தணம் - இரகசியவார்த்தை.—கசுங. இலம்பகம் - நுதலணிமாலை.—கசுஅ. கோடிகம் - பூந்தட்டு.—கஅஉ. பருக்கம் - (மதுப்பருக்கம்)பஞ்சாமிர்தம்.—பாசனம் - உண்கலம் (சொம்பு).

## சு - வது. வெள்ளியம்பலத்திருக்கூத்தாடியபடலம்.

சு. திருவாரூர் - மூலாதாரம்-(குதம்).—திருவானைக்கா - சுவாதிஷ்டானம் (குய்யம்).—திருவண்ணாமலை - மணிபூரகம் (நாபி).—சிதம்பரம் - அநாகதம் (இதயம்).—திருக்காளத்தி - விசுத்தி (கண்டம்).—காசி. ஆஞ்ஞை (நெற்றி).—எ. கைலை - பிரமரந்திரம்.—மதுரை - துவாதசாந்தஸ்தானம்.—கக. தண்ணுமை - மத்தளம்.—கங. உளை-ஆண்மயிர்.—குறளன்- முயலகனென்னும்பூதம்.—கரு. எயிறு-ஆதிவராகத்தின்பற்கள்.—ககூ. அனந்தனுமுனி-பதஞ்சலி.

## எ - வது. குண்டோதரனுக்கன்னமிட்டபடலம்.

உ. மடைவளம் - சமையல்.—கச. வறையல் - துவட்டற்கறி.—கருனை - பொரிக்கறி —துவை - புளிப்புக்கறி.—கசு. துடுவை-நெய்த்துடுப்பு.

## அ - வது. அன்னக்குழியையும் வையையுமழைத்தபடலம்.

க. ஓதளம் - சோறு.—உ. தவனம் - தாகம்.—கச. திமில்- வேங்கைமரம்.

## க0 - வது. மலையத்துவசனையழைத்தபடலம்.

க0 - சிலையத்திரியார் - குன்றவில்லி (சிவன்).—அலையத்திரியட்டவன் - மலைகளின் சிறகரிந்தவன் (இந்திரன்).

## கக - வது. உக்கிரபாண்டியன் திருவவதாரப்படலம்.

கக. பொற்கோள் - பிரகஸ்பதி.—கஉ. துந்துபியைந்து - தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி.—கங. மாவெட்டு - ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீபம்.—கசு. சலத்தலைக்கிடைக்கைப்புத்தேள்-திருமால்.—கஎ.குடபுலத்தரசு-சேரன்.—

கோழிவேந்து - சோழன்.—உ௩. தூர்வை-பச்சறுகு.—உஎ. சந்திமி தித்தல் - நாற்சந்திகூடுமிடத்திற்போதல்.—அன்னமங்கலம் - சோறூட்டல்.—கேசவினை - சவுளம்.—௬0. சங்கை - கணைக்கால்.

## ௧௪ - வது. இந்திரன்முடிமேல் வளையெறிந்தபடலம்.

௧. தேள் - கார்த்திகை.—சிலை - மார்கழி.—மலமதி - இரண்டமாவாசையுள்ளமாதம்.—௧0. சங்கற்பம்- ஏற்பாடு.—௧௨. மயிலை- இருவாட்சி.—௧௬. பானீயம் - பாயசம்.

## ௧௫ - வது. மேருவைச் செண்டாலடித்தபடலம்.

௧௩. பாகு - பாகன்.—௧௫. ஏழுயர்வரை - ஏழுமுழமுள்ள யானை.—௨௪. களைகண் - ஆதாரம்.—௨௫. பாணித்தல் - காலம்நீட்டித்தல்.

## ௧௬ - வது. வேதத்துக்குப்பொருளருளிச்செய்தபடலம்.

௧௫. மேதா - தக்ஷணமூர்த்தம்.—௨எ. மந்தணம் - இரகசியம்.—௩௩. தாரகம் - பிரணவமந்திரம்.—சமட்டி - பொது.—வியட்டி - சிறப்பு.—௩௫ - கிட்டிசைமுகம் - தற்புருஷம்.—தென்பால்முகம் - அகோரமுகம்.—குடதிசைமுகம் - வாமதேவம்.—வடதிசைமுகம் - சத்தியோசாதம்.—௬௧. மார்த்தம் - மிருதிசம்பந்தம்.—வைதிகம் - வேதசம்பந்தம்.

## ௧எ - வது. மாணிக்கம்விற்றபடலம்.

௩௧. புதர் - தேவர்.—௩௪. வபை - வயிற்றிநுபிக்குள் வெண்மைக்கிழங்கு போலுள்ளதாகிய நிணம்.—௩எ. கமலராகம் - பதுமராகம்.—கல்லாரம் - செங்குவளை.—கச்சோதம் - மின்மினி—கோபம்- இந்திரகோபம்.—௩௯. வெள்ளிலோத்தம்போது - விளாம்பூ.—திலகம்-மஞ்சாடி.—௫0. மௌவல் - மல்லிகை.—௫௨. ஒன்பான்மலர்- தாமரை, ஜாதி, செவ்வாம்பல், கோடல், கொடிமல்லிகை, நாற்றிதழ்த்தாமரை, செங்கழுநீர், கொக்கிறகு, மந்தாரம்.—௫௫. கோடுகொன்முத்தம் - யானைக்கொம்பிடத்துண்டாகியமுத்தம்.—௬௧. தமர் - துளை.—கருவி-ஊசி.—௬௩. அருணன்தாய் - வினதை.—அருணன்- சூரியன்சாரதி.—௬௫. கலுழப்பச்சை - கருடப்பச்சை,—௬எ. துல்லை - துளசி.—௬அ. சம்பீரஇலை - எலுமிச்சவிலை.—எ௧. எவ்வமுறல் - புழுவரித்தல்.—எ௯. வெருகு - பூனை.

### கக - வது. நான்மாடக்கூடலானபடலம்.

க. இந்தனம்-விறகு.—ரு. மூகிலேழு-சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருண ம்.—இவை முறையே மணி, நீர், பொன், பூ, மண், கல், தீ, பொ ழிவன.

### உ0 - வது. எல்லாம்வல்லசித்தர் திருவிளையாடற்படலம்.

கஅ. ஆசிலாடல் - விரைந்துசுழன்றாடல்.—கரு. அழல் புனல் வளி வலிகெடல் - அக்கினி ஜலம் வாயுத்தம்பம்.

### உக - வது. கல்லானைக்குக் கரும்பருத்தியபடலம்.

கரு. மதமூன்று - கன்னங் கபோலம் பீஜமதம்.—உஅ. துரிய ம் - மேலானபொருள். உக. சுயல் - தோண்மேல்.

### உஉ - வது. யானையெய்தபடலம்.

க0. ஆபிசாரம் - ஓர்பாகம்.—உச. பொன்னகம்-மகமேரு.—சக. ஆர் - ஆத்திமாலை.—செம்புளாய்க்கொடிய - கருடக்கொடியை யுடைய.

### உங - வது. விருத்தகுமாரர் பாலரானபடலம்.

ரு. இறைவிதன்மனு - பராசத்திமந்திரம்.

### உச - வது. பழியஞ்சினபடலம்.

கஎ. தீமைசெய்தாய்போற் செங்கைகுறைத்தாயென்பது-பா ண்டிய னொருவனோர்நாளிரவில் நகர்சோதனைவரும்போது, ஒருபி ராம்மணன் யாத்திரைக்குப் பிரயாணப்படுந்தருவாயி லிவன் மனைவி தனக்கு ஜீவனோபாயமென்னென்றுகேட்க அரசன் காப்பானென் றுசொல்லிப் போய்விட்டான். அதைக்கேட்ட அரசன் அவளொரு த்தியைமாத்திரம் சம்ரக்ஷணைசெய்தால், ஊரார் விபரீதமாய் நினை ப்பார்களென் றெண்ணி, அவ்வூரிலுள்ள சுமங்கலிகளெல்லோருக் கும் சதாவர்த்திகொடுத்துவரும்படி யுத்தரவுசெய்தான். பின்னொ ருதினமிரவில் அரசனவ்வழியாய்வரும்போது அவ்வீட்டில் ஆட வரரவங்கண்டு அவள்புருஷனோ வேறே யாராகிலுமோவென்று சங்கைகொண்டு கதவைததட்டினன் உள்ளேயிருந்தவன் அவள்புரு ஷனேயாகையால் யாரென்றுவினவினன். அரசன் தான் தினம் அவ்வீட்டுக்குவருவதாக அப்பிராமணன் தன்னைச் சந்தேகிப்பானெ

ன்றஞ்சி யுடனே வீடுகள்தோறும் கதவைத்தட்டிக்கொண்டே போனான். மறுநாள் அவ்வவ் வீட்டுக்காரரும் அரசன்முன்பாகவந்து தங்கள் கதவைத்தட்டிப்போன கள்வனைப்பிடித்துக் கையைக்குறைக்கவேண்டுமென்று முறையிட, அரசன், கதவைத்தட்டின கள்வன் தானேயாகையால், தன்கையைக் குறைத்துக்கொண்டு பின்பு சோமசுந்தரக்கடவுள்கொடுத்த பொற்கையைப்பெற்று - பொற்கைப்பாண்டியனென் றரசுசெய்தகருத்தைப்பற்றி யவன் சந்ததிக்கு வந்தது.—௩எ. ஈற்று - கன்றையுடைய பசு.

## ௨௬ - வது. மாபாதகந்தீர்த்தபடலம்.

௯. கையன் - வஞ்சகன்.—௧௨. புளினர்-வேடர்.—௨௧. அழிதகன்-பாதகன்.

## ௨௮ - வது. நாகமெய்தபடலம்.

௮. நிசிசரர்-அசுரர்.—௨௦. சினகரம் - கோயில்.

## ௨௯ - வது. மாயப்பசுவை வதைத்தபடலம்.

௨. குண்டர் - சமணர்.—௫. பிண்டியான் - சமணக்கடவுள், ௧௪. பருமம் - கவசம்.—௨௧. வீரியம் - இந்திரியம்.

## ௩0 - வது. மெய்க்காட்டிட்டபடலம்.

௨௬. தூங்கு - தொங்குகின்ற.

## ௩௧ - வது. உலவாக்கிழியருளியபடலம்.

௧௯. ஐயானன் - ஐந்துமுகமுடைய பரமசிவன்.

## ௩௨ - வது. வளையல்விற்றபடலம்.

௩௫. நாண் - வெட்கம், கயிறு.—அம்பு - பாணம், நீர்.—௬. வளை - வளையல், சங்கு.—கலை - ஆடை, ஒளி.—எ. இடை - சமயம், இடுப்பு.—விடை - உத்தரம், இடபம்.—அ. நடு-நியாயம், இடுப்பு.—கல் - இளகாமை, மலை.—௯. கங்கைநீர் - கங்காசலம், கையிற்கபாலமுடையநீவிர்.—செப்பு - சொல், கிண்ணம்.—௧0. கந்தரம்- கழுத்து, மேகம்.—உத்தரம் - உத்தரவு, வடக்கு.—௨0. ஐவண்ணம் - செம்மை, வெண்மை, கருமை, பசுமை, பொன்மை.—௨௩. நாணமுதனான்கு - நாண் - மடம் - அச்சம் - பயிர்ப்பு.—௨௪. மேகலை - எழுகோவைகளையுடையது.—௨௫. வல் - செிக்கட்டாங்காய்.—௨௮. கமைப்பு - பொறுமை.—௩௧.வீக்கம் - பூரிப்பு.—௩௫. வளை செறித்தல் - வளையலிடுதல்.

## ருரு - வது. அட்டமாசித்தி யுபதேசித்தபடலம்.

ரு. பராரை - பருமையாகியவடி.—ரு. அறுவர் - கிர்த்திகை மாதரறுவர்.—சு. மடித்தலம் - பக்கம்.—எ சிலதியர்-சேடியர்.—அ. உம்மை - முற்பிறப்பு.—க. பட்டமங்கை - ஒருதலம்.—சழும ல் - துக்கம்.—கஎ. வேதகம் - இரசவாதம். உஉ. மலப்பிணி - மும்மலநோய்.—உரு. பரமகாட்டை - அணுவினுட்பம்.—உரு. பரகாயம் - அன்னியதேகம்.

## ருச - வது. விடையிலச்சினையிட்டபடலம்.

க. வளவன் - சோழன்.—ரு, மித்தை - பொய், நிலையில்லாமை.—கஎ. ஏதம் - குற்றம்.—உo.செங்கை- செவ்வியகிரணம்.—குறி - முத்திரை.—உசு. தாட்கொளல் - பூட்டுந்தாளும்போடல்,—பொறித்தல் - முத்திரையிடல்.

## ருரு - வது. தண்ணீர்ப்பந்தல் வைத்தபடலம்.

ரு. கைகவர்தல் - வாங்கிக்கொளல்.—ரு. வாஞ்சித்தல் - இச்சித்தல்.—கக. காயவாணி - அசரீரிவாக்கு.—கஉ. தெழித்தல்- அதட்டல்.—உரு. அலகைத்தேர் - பேய்த்தேர், கானல்நீர்.—உசு. தூங்குநடை - சோர்ந்தநடை.

## ருசு - வது. இரசவாதஞ்செய்தபடலம்.

ஙo. முருந்து - மயிலிறகின்அடி.

## ருஎ - வது. சோழனை மடுவில்வீட்டியபடலம்.

கo. நாவிரியாதமாற்றம்- அசரீரிவாக்கு.—கரு. துழாய்க்கோல்நாட்டி - துளபமாலையையுடைய அம்பு (திருமால்) பூட்டி.

## ருஅ - வது. உலவாக்கோட்டை யருளியபடலம்.

ச. அல்லேறுகண்டன் - நீலகண்டன்.—சரு. பஞ்சாதி - வேதவுறுப்பு.—கசு. கோட்டை - உலவாக்கோட்டை.

## ருகூ - வது. மாமனாகவந்து வழக்குரைத்த படலம்.

ரு. இருமை - இகபரகுணங்கள்.—எ. மாற்றவர் -ஞாதியர்.—சரு அட்டில்வாய்- சமையல்கட்டு.—அறத்தாறு - நீதிசபை.—பட்டிமை - பொய்.—ஒட்டல் - தீர்மானித்தல்.—கஎ. அறக்கொடி-தருமவல்லி - பார்வதி.—உo. உட்கிடை- உள்ளக்கருத்து.—உஎ. ஊன்

மாராட்டம் - வஞ்சித்துக்கொல்லல்.—இம்மி - மூந்திரைக்கூறு பத்தாயில் ஒருகூறு.

சО-வது. வரகுணனுக்குச் சிவலோகங்காட்டியபடலம்.

கூ-கனவட்டம்-குதிரை.—எரிமாலை - தீக்கடன்.—எ. தாருவேந்து - அரசமரம்.—அ. அகமருஷணம் - ஒருவகைவேதமந்திரம்.—கO. வெள்ளில் - விளாம்பழம்.—கக. இறவு - இருல்மீன்.—ருக. வணமுகமைந்தன் - விநாயகன்.—கூக. மாழாந்தல் - மயங்கல்.—எழுபிறப்பு தேவர் - மக்கள் - விருக்ஷம்- விலங்கு-பறவை-ஊர்வன, நீர்வாழ்வன.—நான்குவகையோனி - அண்டசம் - உற்பிசம் - சுவேதசம் - சராயுசம்.

சக - வது. விறகுவிற்றபடலம்.

சு. பல்லுணக்கருவி - உணவிற்குரியவை.—ஙக. வேரல் - மூங்கில்.—சிரால் - மீன்குத்திப்பறவை.—சஙு. அழுக்கம்-பொருமை.—ருஅ. தந்திரிக்கிழவன் - யாழ்வல்லவன்.

சஉ - வது. திருமுகங்கொடுத்தபடலம்.

கO. "மதிமலிபுரிசை மாடக்கூடற்- பதிமிசைநிலவும் பானிறவரிச்சிற, கன்னம்பயில்பொழி லாலவாயின் - மன்னியசிவன்யான் மொழிந்திடுமாற்றம், பருவக்கொண்மூப் படியெனப்பாவலர்க்-கொருமையினுரிமையி னுதவியணிதிகழ், குருமாமணிதிகழ் குலவியதலைக்கீழ்ச் - செருமாவுகைக்குஞ் சேரலன்காண்க, பண்பால்யாழ் பயில் பாணபத்திரன் - தன்போலென்பா லன்பன்றன்பால், காண்பதுகருதிப் போந்தனன்று - மாண்பொருள்கொடுத்து வரவிடுப்பது வே". என்னுந்திருமுகப்பாசுரம்.—உச. தளிகை-பாத்திரம்.—உரு. அஞ்சு - அகிற்கூட்டஞ்சு. (சந்தனம் - பச்சைக்கற்பூரம் - எரிகாசு- தேன் - ஏலம்).

சச - வது. இசைவாது வென்றபடலம்.

உக. மதங்கி - பாணஸ்திரீ.—உஉ. வராவழக்கு - ஓரவழக்கு.—ஙஎ. பரிவட்டணை - இசைவிகற்பு.

சரு - வது. பன்றிக்குட்டிக்கு முலைகொடுத்தபடலம்.

கூ - வீக்கம் - இடையூறு.—கூங. சேதனம் - அறிவு.

சஎ - வது. கரிக்குருவிக்கு உபதேசித்தபடலம்.

கஉ. இத்திஞ்சயம்-மரணத்தைசெயிக்கு மோர்வேதமந்திரம்.

ருo - சுந்தரப்பேரம்பெய்தபடலம்.

ரு. ஆரயித்தல் - வழிபறித்தல்.—கஅ - சூளா - சுழல்.—ருo. கொடிஞ்சி - தேரின்மேலுறுப்பு.—ருஉ. குறையுடல் - கவந்தம்.—ருக - நச்சுமரம் - எட்டிமரம்.

ருஉ - வது. தருமிக்குப் பொற்கிழியளித்தபடலம்.

க. தற்குஉவை - தனக்கு அவை.—சு. இண்டை - தலைக் கட்டுமாலை.—உரு. சுருப்பு - வலித்தல் விகாரம்.—புளினம் - மணற்றிட்டை.—உஅ. ஏமாசலம் - பொன்மலை.—சக. கூழை - கூந்தல்.—அo. ஐம்பால் - கூந்தல்.—பித்தை - மயிர்.—இறும்பூது-அதிசயம்.—அக. வினைசெய்மாக்கள் - ஏவலாளர்.

அஅ. "கொங்குதேர்வாழ்க்கை யஞ்சிறைத்தும்பி
காமஞ்செப்பாது கண்டதுமொழிமோ
பயிலியதுகெழிஇய நட்பின்
மயிலியற்செறியெயிற் றரிவைகூந்தலி
னறியவுமுளவோ நீயறியும்பூவே" என்னும்பாசுரம்.

கரு. விபுதர்-புலவர்.—க00.அடைப்பை-வெற்றிலைப்பாக்குப்பை.—களாஞ்சி - படிகம்.—கோடிகம் - பூந்தட்டு.

ருரு - வது. கீரனைக்கரையேற்றிய படலம்.

கூ. விண்படை - குதர்க்கம்.—உஎ. அம்பகம் - கண்.

ருச - வது. கீரனுக்கு இலக்கணம் உபதேசித்தபடலம்

கரு - குடம்பெறுமுனி-அகத்தியர்.—கக. பௌளம் - கடல்.

ருரு - வது. சங்கத்தார் கலகந்தீர்த்தபடலம்.

ச. துருவல் - தேடல்.—கரு. துலைநா - தராசுமுள்.

ருசு - வது. இடைக்காடன் பிணக்குத்தீர்த்தபடலம்.

உரு. பொக்கம் - பொய், கூடாவொழுக்கம்—உரு. குறி - சிவலிங்கம்.—ருஎ. மருத்துவன் - தேவேந்திரன்.

ருஎ - வது. வலைவீசினபடலம்.

க. ஞாழல் - குங்குமமரம், கோங்குமரம்.—உ. மந்தணம் இரகசியம்.

## ருஅ - வது. வாதவூரடிகளுக் குபதேசித்தபடலம்.

எ. கருவித்திறநூல் - ஆயுதபரிக்ஷை.—துளக்கம் - ஐயந்திரிபு.—அ. தீபம் - தீவுகள்.—க0. மெய்ம்மையாம்பொருள் - நிலைப்பொருள். பொய்ம்மையாம்பொருள் - நிலையாப்பொருள்.—கஉ. சத்தினிபாதர் - பக்குவஆன்மாக்கள்.—உஅ. கொந்து -கொத்து.—உகூ, கடம் - காடு.—ருஉ. கருக்குதல் - நீருக்குதல்.—ருரு. வேயில் - மூங்கிலினிடம்.—சஅ. ஞானவாணி - ஞானசரஸ்வதி.—ருகூ. பெருவிலைமணி - மாணிக்கம்.

## ருகூ - வது. நரிபரியாக்கியபடலம்.

கூச. மருந்து - காற்று.—கூஎ. உரவோர் - பெரியோர்.—எஎ. ஐங்கதி - மல்லகதி, மயூரகதி, வானரகதி, சசகதி, சரகதி.—கூரு. அரணம் - கோட்டை.—துருக்கம் - மலை.—கூகூ. வேதநூற்சிகை - உபநிடதம்.—கூகூ. ஞெகிழி - கொள்ளிக்கட்டை.

## கூ0 - வது. பரிநரியாக்கியபடலம்.

கச. நொள்ளைநாகு - நத்தை.—நந்து - இப்பி,—ஞெண்டு - நண்டு.—ககூ. சுருங்கை - நுழைவாயில்.—நூழில் - சலதாரை.—ருகூ. திமிரம் - இராத்திரி.—ருஅ. கலம்-கப்பல் - தோணி.—திமில்-துச்சில் - குடிசை.

## கூக - வது. மண்சுமந்தபடலம்.

ச. பலாலம் - வைக்கோல்.—மேகசாலம் - மேகக்கூட்டம்.—உஉ. புள்ளியுடைத்துகில் - புலித்தோல்.—புறத்தானை-முன்றானை.—ருகூ. பண்பபு-நயக்கம்.—கூஎ. பொச்சம்- களங்கம்.—கஎ. சூளோட்டல் - சபதம்பண்ணல்.—க0க. சீவரப்போர்வை - மரவுரி.

## கூஉ - வது. பாண்டியன் சாபந்தீர்த்தபடலம்.

உச. அருமறைவணங்குங்கோயில் - திருமறைக்காடு.—உஅ. வெங்குருவேந்தர் - திருஞானசம்பந்தசுவாமிகள்.—சரு. அட்டமூர்த்தம் - நிலம், நீர், நெருப்பு, காற்று, விசும்பு, நிலா, பகலோன், ஆன்மா.

## கூரு - வது. சமணரைக்கழுவேற்றியபடலம்.

ரு. கைதவம்-வஞ்சகம்.—உக. இந்திரசாலம்-மாயவித்தை.—ருக. வேணுபுரச்செல்வர் - திருஞானசம்பந்தசுவாமிகள்.

## வன்னியுங்கிணறு மிலிங்கமுமழைத்தபட்லம்.

கஉ. ஆவலித்தல் - வாய்திறத்தல்.—கங. அணங்கு - துன்பம்.—உக. தென்னுலகு - யமலோகம்.

## சுரு - வது. அருச்சனைப்படலம்.

க. கவை - கப்பு.—உ. உலோபாமுத்திரை - அகத்தியமாமுனிவர் மனைவி.—ங. கோடு - சிகரம்.—ரு. மண்ணுதியாறுறுநீத்தல் - பிரிதிவிமுதல் நாதமீறுகிய முப்பத்தாறு தத்துவசித்தி.—சு. ஊறுபடல்-அழுந்துதல், நெகல்- உருகுதல்.—எ. ஓரை-முன்றத்தம்.—உலகநாயகன்-காசிவிசுவேசன்.—அ. ஐம்புலன்-மெய், வாய், கண், மூக்கு, செவி.—நாவாடல் - செபித்தல்.—கூ. சண்ணித்தல் - பூசுதல், கண்டிகை - உருத்திராக்கமாலிகை.—கஎ. முதனூனான்கு - நான்குவேதங்கள்.—உங. மேழகம் - ஆடு.—கக. அருள்பெறுதலம்-விருபாக்கம்.—நல்குமலை - திருப்பருப்பதம்.—கஉ. சுரபி - பசு.—இவ்வூர் - திருக்கோகர்நம்.—தேள்மாதம் - கார்த்திகைமாதம்.—அவ்வூர் - திருவஞ்சைக்களம்.—கங. வேடன் - கண்ணப்பர்.—கிரி - திருக்காளத்தி.—ஆடியது - திருவாலங்காடு.—பிலமிது - திருக்காஞ்சீபுரம்.—கச. திருமறுமார்பன்-மகாவிஷ்ணு.—ஏத்திடமிது-திருமாற்பேறு.—ஓதுவித்திடம் - திருவோத்தூர்.—கரு. விலங்கு-பன்றியாகியவிஷ்ணு.—புள்-அன்னமாகியபிரமன்.—நிலையிது- திருவண்ணமலை.—கங்கம் - கழு.—நோற்குமலையிது-திருக்கழுக்குன்றம்.—இக்குன்றை-விருத்தாசலம்.—கசு. அந்தகன் - அந்தகாசுரன்.—புரமீது-(அஷ்டவீரட்டத்தொன்றுகிய) திருக்கோவலூர்.—பதி-(அஷ்டவீரட்டத்தொன்றுகிய) திருவதிகை.—கஎ. மன்றமீது-சிதம்பரம்.—பதியது- திருவாரூர்.—பதியிது-திருமறைக்காடு.—கஅ. புரமிது-திருத்தோணிபுரமாகியசீர்காழி.—பதியீது- புள்ளிருக்கும்வேளூர்.—ககூ. பொன்னித்தானம்- மாயூரம்.—மூதூரீது-திருக்கோடிகா.—இப்பதி-தருமபுரம்.—உ௦.பதியிது-திருவெண்காடு.—பிரமனூரிது-திருப்பனந்தாள்.—உக. கரிமுகத்தவுணன்-கயமுகாசுரன்.—அண்ணல்-விநாயகர்.—நகரமீது - கணபதீச்சுரம்.—அர்ச்சித்தது - திருச்செங்காட்டங்குடி.—சேயவுளம்பதியீது - திருச்சேய்ஞலூர்.—உஉ. சிறுவன் - மார்க்கண்டேயர்.—மூதூரது - (அஷ்டவீரட்டத்தொன்றுகிய) திருக்கடவூர்.—கோயில் - (அஷ்டவீரட்டத்தொன்றுகிய) திருவழுவூர்.—உங. இடமீது - (அஷ்டவீரட்டத்தொன்றுகிய) திருக்கண்டி

யூர்.—அனங்கன் - மன்மதன்.—இருக்கையீது (அஷ்டவீரட்டத்தொன்ருகிய) திருக்குறுகை.—மாமன் - தக்கன்.—இருக்கை—(அஷ்டவீரட்டத்தொன்ருகிய) திருப்பறியலூர்.—உச. அவுணன் - சலந்தரன்.—உறையது-(அஷ்டவீரட்டத்தொன்ருகிய) திருவிற்குடி.—இடமிது - திருப்புறமியம்.—உரு. இப்பதி - திருவிடைமருதூர்.—நீர்ப்பதியை - கும்பகோணம்.—உசு. குருவுறைமலையீது-சுவாமிமலை.—புரமிது - திருவீழிமிழலை.—தலமிது- திருவையாறு.—உஎ. நகரிது-திருவானைக்காவல்.—வரையிது - திரிசிரபுரம்.—பொன்னியாறது-காவேரியாறு.—௩க. கொடுங்குன்று - கொடுங்குன்றம்.—புத்தூர்-திருப்புத்தூர்.—ஆடானை - திருவாடானை.—௩உ. புனவாயில்-திருப்புனவாயில்.—நகர் - திருப்பூவணம்.—கானப்பேர் - காளையார்கோயில்.—சுழியல் - திருச்சுழியல்.—௩௩. அணிநகர் - திருவிராமேச்சுரம்.—தொன்னகர் - திருநெல்வேலி.—௩ச. தொன்னகர் - திருக்குற்ருலம்.—பொருப்பு - திருப்பரங்குன்றம்.—வளநகர் - திருவேடகம்.—௩சு. பொற்கமலம் - பொற்ருமரை.

திரிசொற்பொருள்விளக்கம்
முற்றுப்பெற்றது.

---



உ

சிவமயம்.

பரஞ்சோதிமுனிவராலே செய்யப்பட்ட

இந்த மதுரைத்

# திருவிளையாடற்புராணம்

கலியுகாதிவருஷம் ௪௯௮௧-ல் நிகழ்கின்ற பிரமாதிவருஷம் தைமீ ௧௰௨, சோமவாரம், பௌர்ணமிதிதி, பூசநக்ஷத்திரம், கூடிய இந்தச்சுபதினத்தில் திருப்போரூர் மலையடிவாரத்தில் அன்னக்காவடி மடமென்று வழங்குகின்ற சிவயோகிமடத்துத் தருமகயிங்கரியத்திற்காக

மயிலை சர்க்கரை

வீராசாமிமுதலியார் குமாரர்

செந்தில்வேலு முதலியாரால்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டு நிறைவேறியது.



பூர். ௨௬

